அது இப்பொழுது உண்மை அல்ல. பத்து நாட்களுக்கு முன்னால் அவருடைய தம்பி நியமிக்கப்பட்டிருக்கிறார் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். ஆகவே, இந்த விஷயத்தில் நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** அந்த விஷயம் எனக்குத் தெரியாதது வாஸ்தவம்தான். நான் அதைப்பற்றி விசாரிக்கிறேன்.

*Flood banks (the Kannanar)*

* 1403 *Q.*—Sri R. SRINIVASA IYER (on behalf of Sri A. R. **MARIMUTHU**) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பட்டுக்கோட்டை, ஒரத்தநாடு தாலுக்காவிலுள்ள கண்ணனாறு வெள்ளத்தடுப்பு வேலைகள் எந்த நிலையிலுள்ளது ?

The Hon. Sri P. KAKKAN : Flood banks on the right side of Kannanar have already been formed in Periakottai village limits. Proposals for forming flood banks to Kannanar on the left side in Olayakunnam and Kanniakuruchi village limits are under active consideration.

**Sri R. SRINIVASA IYER :** இந்த கண்ணனாறு வடசேரியிலிருந்து பெரியகோட்டைக்குப் போய் சமுத்திரத்தில் விழுகிறது. இரண்டு ஸைடுகளிலும் ஜலம் மிதந்து வருஷத்தில் 1,000, 1,500 ஏக்கர் நிலத்திற்கு நஷ்ட மேற்படுகிறது. வடசேரியில் "கரை" எழுப்பப்பட்டிருக்கிறது. பெரியகோட்டையிலும் எழுப்பப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். வடசேரிக்கும் பெரியகோட்டைக்கும் நடுவில் இருக்கக்கூடிய இரு கரைகளும் என்ன கதி ஆகிறது. அதற்கு ஏதாகிலும் ஏற்பாடு இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** என்னிடம் இருக்கிற தகவல்படி

The Superintending Engineer has submitted plans and estimates for Rs. 38,000 to Chief Engineer (Irrigation) for forming flood banks to Kannanar drain in Olayakunnam and Kanniakuruchi village limits on the right side. These are proposed to be taken up under special minor irrigation programme. The estimates are under examination of local officers. The Chief Engineer has stated that necessary action will be taken to implement this scheme after examination is completed.

இந்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆனால், ஒரு இடத்தில் கட்டி, இன்னொரு இடத்தில் கட்டாவிட்டால் சேதம் ஏற்படும் என்று தெரியும். அதைப்பற்றி என்ஜினியரிடம் தகவல் சொல்லுகிறேன் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Hospital Employees (Government General Hospital, Madras)*

* 1404 *Q.*—Sri S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether it is a fact that the Engine Drivers, Electricians, Mortuary Attendants, Liftmen and Fitters working in the Government General Hospital, Madras, have not been given the revised pay scales from 1st June 1960 as recommended by the Madras Pay Commission ; and

(*b*) if so, the reason therefor?